200

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முத்தகபஞ்சவிஞ்சதி.

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

முத்துக்குமாரகவிராசரவர்கள்

இயற்றியது.

இது

வண்ணைநகர்

சுவாமிநாதபண்டிதரவர்கள்

விரும்பியவாறு

சுன்னாகம்

அ. குமாரசுவாமிப்புலவரவர்களால்

பரிசோதித்து,

மு. வைத்தியநாதப்பிள்ளையால்

சென்னபட்டணம்

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பிலவங்கஹு ஐப்பசிமீ.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முத்தகபஞ்சவிஞ்சதி.

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

முத்துக்குமாரகவிராசரவர்கள்

இயற்றியது.

இது

வண்ணைநகர்

சுவாமிநாதபண்டிதரவர்கள்

விரும்பியவாறு

சுன்னாகம்

குமாரசுவாமிப்புலவரவர்களால்

பரிசோதித்து,

மு. வைத்தியநாதப்பிள்ளையால்

சென்னபட்டணம்

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பிலவங்க௵ ஐப்பசி௴.

# உபநியாசம்.

முத்துக்குமார கவிராசராவார் யாழ்ப்பாணத்திலே உடுவிற்பதியிலே வேளாளகுலத்திலே சந்திரசேகரமாப் பாணர் சந்ததியிலே தோன்றிய அம்பலவாணபிள்ளை என்பவரின் புத்திரர். இந்த அம்பலவாண பிள்ளையே எமது தாதைதன்றாதைக்குந் தாதையாவர். இம்முத்துக் குமாரகவிராசர் கிருகஸ்தராய் வாசஞ்செய்த ஊர் நமது சுன்னுகம். இவருடைய தௌகித்திரர்கள் பலசிறப்புக்க ளோடும் இப்போது வசிக்கின்றார்கள். இவரிருந்த காலம் இதனால் நன்கு துணியப்படும்.

இவர் கவிபாடுந் திறத்தினால் யாவரினுஞ் சிறந்து விளங்கினார். இவர் கவிகளைக் கேட்டுணர்ந்த கற்றோர் பலரும் முத்துக்குமாரகவிராசர் என்றே இவரை வழங்கி வந்தார்கள். அங்கில திராவிடபண்டிதராய் அதிகாரபுரு டராய்ப் பிரசித்திபெற்று விளங்கிய சி. வை. தாமோ தரம்பிள்ளையவர்களுக்குத் தமிழ் கற்பித்த தமிழாசிரிய ரும் இவரேயாவர். பிள்ளையவர்கள் தமது நூற்பதிப்

புரைகள் எல்லாவற்றிலும் குருவணக்கமாக இவர்க்குக் கூறியிருக்கும் துதியே அதற்குச் சான்றாகும். சூளாமணிப் பதிப்புரையிற் கூறிய குருவணக்கத்தை மாத்திரம் ஈண்டுக் காட்டுதும்.

## தமிழாசிரியவணக்கம்.

தெள்ளுதமிழ்க் கடல்கடந்து செழியகலைத் துறைபடிந்து
திரிபின் ஞானக்
கொள்ளைகொண்டு நுகர்ந்தமுத்துக் குமாரகவி மேசமிதைக்
கொடிச்சுன் ஞக
வள்ளலென துள்ளமதி கொள்ளநறை விள்ளுதமிழ்
மணஞ்சற் றேறி
வெள்ளறிவின் முடைநாற்றம் வீவித்தான் விரைமலர்த்தாள்
மிலைவன் மாதோ.

செய்யுள் வடிவமாக இவராற் செய்யப்பட்ட நூல்களுஞ் சிலவுள. அச்சிடப்பட்டிருக்கும் ஞானக்கும்மி, யேசுமதபரிகாரம் என்னும் நூல்களும் இவர்செய்த நூல்களேயாம். மற்றையன முற்ற அகப்பட்டில. இவராற் பாடப்பட்ட தனிப்பாடல்களும் எண்ணிறந்தன என்றும், யாவரும் விரும்பிக்கேட்டுப் பாடம் பண்ணிக் கொள்ளுவர் என்றும் முதியோர் சிலர் கூறுவர். ஒன்றேனும் ஏட்டிலே எழுதப்பட்டிருக்கவில்லை. இவரிடங்கேட்டுப் பாடஞ்செய்திருந்த அப்பொழுதை முதியோர்பாற்

கேட்டுப் பாடஞ்செய்த முதியோர் சிலர் இப்போதும் இருக்கின்றார். அவர்வாயிலாகாவே சில கவிகள் அகப் பட்டன. அவற்றுள்ளும் அடியும் பிறவும் வேறுபட்டன சில. நான்கடியும் பூரணமாக இல்லாதனவும் சில.

இவையெல்லாம் நீக்கி இருபத்தைந்து கவிமாத் திரம் ஒருவாறு சுத்தமுடையனவாக அகப்பட்டன. இவைதானும் நிலை பெறுதற்குக் காரணம் யாவரும் விரும்பிப்படித்து நினைத்திருத்தற் கேற்ற விநோதமான சொற்சுவையும் பொருட்சுவையுமுடையனவாய் இருக் குந்தன்மை என்றே கொள்ளுதும். இவ்விருபத்தைந்து கவிக்குள்ளே சில சிதம்பர நடராஜமூர்த்திமேலன; சில மாவிட்டபுரச் சுப்பிரமணியக் கடவுள் மேலன; சில நல் லூர்ச் சுப்பிரமணியக்கடவுள் மேலன; சில சுன்னுகத் துச் சந்திரசேகர விநாயகமூர்த்திமேலன; சில ஐயனார் மேலன; சில மயிலணி நரசிங்கமூர்த்தி மேலன. வைதி ருகமாயிருத்த லன்றி விநோதமான தக்க கவிகளாய் யாவராலும் விரும்பப்படுதல்பற்றி இவைகளை அச்சிடத் துணிந்தேம்.

இங்ஙனம்,

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

உ

சிவமயம்.

# முத்தகபஞ்சவிஞ்சதி.



## விநாயகவணக்கம்.

வாட்டானை யன்னமை தீட்டா விழிமிளிர் மான்மகளைத்
தாட்டானை யானுக்கு வேட்டானை யன்பர்தஞ் சஞ்சலங்கள்
மீட்டானை யென்கவி கேட்டானைச் சுன்னையின் மேவுநரை
மாட்டா னருளொரு கோட்டானை நாளும் வணங்குவனே. (க)

இது சுன்னாகத்துச் சந்திரசேகரவிநாயகக்கடவுண்மீது வணக்கமாக வழியெதுகை அமைத்துப்பாடிய கட்டளைக்கலித்துறை. வாட்டானை - வாட்படை. தாட்டானையான் - முருகக்கடவுள். தாட்டானை - கோழி. தாள் - கால். தானை - ஆயுதம். வேட்டான் - வேட்பித்தோன். நரைமாட்டான் - சிவன். நரை - வெள்ளை.

## இரட்டையாசிரியவிருத்தம்.

நன்மைசெய் தறிகிலேன் தன்மவழி செறிகிலேன்
நம்பினர்க் குதவிசெய்யேன்
நந்தா வனம்வையேன் மாதான மீந்துயேன்
நற்கொடை யிலாதகையேன்

உ புன்மைவழி தேடுவேன நன்மைவழி நாடுவேன
பொய்ச்சூது விளையாடுவேன்
புல்லரைப் பாடுவேன புலைமகட் கூடுவேன்
பொய்ச்சமய வழியோடுவேன்
சென்மமரு டாய்தந்தை குருதெய்வ நிந்தனைகள்
செய்துளே னெனினும்வாயாற்
சிவசிதம் பரமென்று சொல்லுமடி யேன்பவந்
தீரா திருக்குமோதான்
சின்மய சொரூபனே யுன்மயம தாம்பாத
தெரிசன மெனக்கருளுவாய்
சிதம்பர மெனுந்தவர் நிதம்பர விதம்பெறு
சிதம்பர மகாதேவனே. (உ)

பாதநூ புரமணி கலின்கலின் கலீனென்று
பரதவித மாடவேங்கைப்
பட்டாடை மடமடென விட்டாட வரையினிற்
பன்னகக் கச்சையாடச்
சோதிநூ லாடவுட ஞதியே னக்கொம்பு
தொட்டாட விதிகபாலத்
தொடையாட முழுவென்பு புடையாட மான்கன்று
துள்ளிவிளை யாடமதியின்
பாதியா டக்குழையின் மீதுபொற் குண்டலம்
பளபளென் றாடவணியும்
பணியாட வணியக்கு மணியாட மதலைப்
பசுந்தொடையு மாடவேணிச்
சீதவா னதியாட மன்றாடு நின்பாத
தெரிசன மெனக்கருளுவாய்
சிதம்பர மெனுந்தவர் நிதம்பர விதம்பெறு
சிதம்பர மகாதேவனே. (ங)

மாதவனு நாவினுறை மாதவனு நால்வேத
        வாக்கிய முரைப்பதொருபால்
வானவரு மன்பினிறை வானவரு மரகர
        மாதேவ னென்பதொருபால்
ஆதவனு மலையமலை யாதவனு மம்புலியு
        மஞ்சலிசெய் தார்ப்பதொருபால்
அகிலபுவ னத்துறை சனங்களுஞ் சிவசிவ
        வருந்துதிகள் செய்வதொருபால்
ஓதுறு பதஞ்சலி வியாக்கிர பதத்துமுனி
        யோங்கவொரு பாங்குளுற்றும்
உத்தம நிருத்தபரி சுத்தசிவ சம்புவே
        உண்மைதரு ஞானகுருவே
சீதமா மதியமணி சோதியே நின்பாத
        தெரிசன மெனக்கருளுவாய்
சிதம்பர மெனுந்தவர் நிதம்பர விதம்பெறு
        சிதம்பர மகாதேவனே. (௪)

இவை மூன்றும் சிதம்பர நடராஜமூர்த்திமீது தோத்திரரூபமாகப் பாடிய ஆசிரியவிருத்தம். வழியெதுகையும் மடக்கலங்காரமும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

## வெண்பா.

கோவிற் கடவைக் குருபரனு ருற்சவத்தைச்
சேவித்து நிற்பார் தெருத்தோறுங்—காவிச்செலும்
காவடியைக் கண்டிருப்பார் காண்பரோ கூற்றுவனார்
தாவடியே ழஞ்சுமையைத் தான். (௫)

இது மாவிட்டபுரக் கந்தசுவாமிகோவிலிலே உற்சவதினம் ஒன்றிலே பத்தசனங்கள் பால்கட்டிக்கொண்டுவரும் காவடிகளைக் கண்டார் சிலர் வேண்டுகோளின்படி பாடிய வெண்பா. கோவிற்கடவை என்பது மாவிட்டபுரத்திலே சுப்பிரமணியக்கடவுள் கோவில்கொண்டு வீற்றிருக்கும் ஸ்தானம். தாவடி - தாவுகின்றபாதம். ஏழஞ்சுமை - எருமை. இது சங்கியாதை என்னும் பிரகேளிகை. எருமை என்பதிலே எகரத்தினை ஏழென்றும், ருகரத்தினை அஞ்சு என்றும் இலக்கம் பற்றி மறைத்துக் கூறினர்.

கருவிழா வுலகினிடைப் பிறந்துமெய்ம்மை மறந்துழலுங்
கன்ம சென்ம
உருவிழா முன்னெவரே யாயினுங்கோ விற்கடவை
யுறையுந் தேவைப்
பெருவிளாங் கனிக்கான்கன் றெறிந்தமான் மருகன்வேற்
பெருமா னுக்காந்
திருவிழாத் தரிசிக்கச் செல்லுவார் யமதண்டம்
வெல்லு வாரே. (சு)

இது மகாவித்துவானாகிய சேனாதிராயமுதலியாரோடு இம்முத்துக்குமாரகவிராசருங் கூடிப்பாடிய விருத்தம் என்பது கர்ணபரம்பரை.

கார்படியு நகுலகிரித் திருக்கோயிற் கடவையினூர்
கடவுஞ் செம்பொற்
றேரடியிற் பின்னடியார் திருக்கூட்டத் துடன்வலமாய்த்
தெரிசிப் பார்கள்

ஓரடிக்கோர் பரிமகப்பே றடைவருடம் பாலுருள்வா
ருற்ப வத்தின்
வேரடியுங் கடந்துகந்த வேளடியின் முத்திசென்று
மேவு வாரே. (எ)

இது மகாவித்துவானுகிய சேனுதிராசமுதலியார் முதலடியும், முத்துக்குமாரகவிராசர் மற்றை மூன்றடியுமாகப் பாடிய விருத்தம் என்பது கர்ணபரம்பரை.

இருவரும் ஒரு தேர்த்திருவிழாவிற் சென்று நின்றபோது தேர்த் திருவிழாவிற் சேவைசெய்யுஞ் சனங்களேயே சுட்டிக் கூறினர். நகுல கிரி - கீரிமலே. இது நகுலமுனிவர் என்பவர் யாத்திரிகராய் இங்குள்ள சாகரசங்கமபுண்ணிய தீர்த்தத்திலே வந்து தீர்த்தமாடித் தீர்த்தற் கரிய கீரிமுகம் நீங்கப்பெற்ற காரணம்பற்றி நகுலகிரி என வழங்கப் படுகின்றது. இப்போது இவ்விடம் தீர்த்தமகத்துவம், சிவாலயம், மடாலயம், வித்தியாலயம் முதலியவற்ருற் பிரசித்திபெற்று விளங்கு கின்றது.

நூறுநா லாறுதிருக் குடையானுங் கணங்களும்போய்
நுவன்று நாமங்
கூறிநாத் தழும்புறவே தொழும்புறுங்கோ விற்கடவைக்
குகனுர் கண்ணீ
ராறினர் திருமுகங்க ளாறினர் படைக்கஞ்சா
வயிலார் சங்கத்
தேறினர் சப்ரமஞ்சத் தேறிஞ ரடியவரீ
டேறி ஞரே. (அ)

இது மாவிட்டபுரத்திலே ஒரு சப்பிரத்திருவிழாவிலே சென்று நின்ற போது சுப்பிரமணியக்கடவுள் சப்பிரமஞ்சத் தேறுதற்கண் சொல்லியவிருத்தம்.

நூறு நாலாறு திருக்குடையான் - ஆயிரங்கண்ணனாகிய இந்திரன். நூறு நாலு - நானூறு. நூறு ஆறு - அறுநூறு. இரண்டினையும் கூட்டுங்கால் ஆயிரமாகும். திருக்கு - கண். ஈடேறல் - வலியுறுத்தல், பெருமையடைதல்.

மல்லாக மாதகலான் மருகன்சுன் னாகத்தான்
        மகன்பா வாணர்
சொல்லாச்சீ ரீவினையான் றுன்னாலை யானத்தான்
        சுரும்ப ரோதிச்
சில்லாலை யிருள்வென்ற குறக்கொடிகா மத்தானைச்
        சிகண்டி மாவூர்
வல்லானை மாவிட்ட புரநகரத் திடைப்பவனி
        வரக்கண் டேனே.                                        (க)

இது மாவிட்டபுரக் கந்தசுவாமி பவனிவருதலைக் கண்ணுற்ற போது கூறிய ஆசிரிய விருத்தம். இதன்கண் வடநூலார் கூறும் பிரகேளிகைவகையுள் ஒன்றாகிய நாமாந்தரிதை என்னும் பிரகேளிகை அமைக்கப்பட்டிருக்கின்றது.

பிரகேளிகையாவது கருதிய பொருளை ஆழ்ந்து கிடக்குமாறு மறைத்துவைத்து வெளிப்படையிலே வேறொன்றாகத் தோன்றும்படி விநோதமுறச் செய்யப்படும் செய்யுள். நாமாந்தரிதையாவது கருதிய பொருளை வேறுநாமங்களிலே மறைத்திருப்பது. மல்லாகம்,

மாதகல், சுன்னுகம், ஈவினை, துன்னாலை, சில்லாலை, கொடிகாமம், என்னும் ஊர்ப்பெயர்கள் ஏழும் கருதிய பொருளை மறைத்திருக்கும் நாமாந்தரங்கள். ஈவினை - புன்னாலைக்கட்டுவனையடுத்துக் கிழக்கேகிடக்கும் ஒரு சிற்றூர். துன்னாலை - புலோலியையடுத்துக்கிடக்கும் ஒரூர்.

இங்கே மறைத்து வைக்கப்பட்ட பொருளையும் கூறுதும். மல் ஆகம் மாது அகலான் மருகன் - வலிய மார்பிலே ஸ்ரீதேவியகலாதிருத்தலையுடையவராகிய நாராயணக்கடவுளுக்கு மருகன். சுன்னுகத்தான் - திருக்கைலாசமலைவாசராகிய சிவன். சீர்வினையான் - செல்வம் கொடுக்கும் செயலுடையான். துன்னாலையானத்தான் - மன்மதனுக்குமைத்துனன். சில்லால் ஐ இருள் வென்ற - தகட்டணியால் வியக்கப்படும் இருளையும் வென்ற. குறக்கொடி காமத்தான் - வள்ளிநாயகியின்மேலே விருப்புடையவன். மற்றைய வெளி.

## கட்டளைக்கலித்துறை.

கரைக்காற் புனல்வயற் றென்மாவைக் கோவிற் கடவைச்செவ்
வரைக்கா விரத மணிக்குர லார்ப்பு வருமுன்னமே [வேள்
அரைக்கான்முக் காற்கணக் குக்குமென் சந்த மளாவுநறு
விரைக்கா றரக்கடுங் காலாய் விளைந்தது மெய்யெங்குமே. (கo)

இது மாவிட்டபுரத் தேர்த்திருவிழாத் தெரிசிக்கவந்த ஒரு பெண் செயலாக அகப்பொருளமைத்துக் கூறிய ஒரு கட்டளைக்கலித்துறை.

அரைக்கான் முக்காற் கணக்குக்கு என்பதற்கு இவளுக்கு எனப் பொருள் கூறுவர். இவளுக்கு என்பதில் இ, வ, ளு என்னும் மூன்றெழுத்தினையும் அரை, கால், முக்கால் என்னும் மூன்றும் முறையே

குறிப்பாய்க் காட்டி நின்றன. இது சங்கியாதை என்னும் பிரகேளிகையில் அமையும்.

## கட்டளைக்கலிப்பா.

முடிவி லாதுறை சுன்னகத் தான்வழி
முந்தித் தாவடிக் கொக்குவின் மீதுவந்
தடைய வோர்பெண் கொடிகாமத் தாளசைத்
தானைக் கோட்டை வெளிகட் டுடைவிட்டாள்
உடுவி லான்வரப் பன்னலை யான்மிக
வுருத்த னன்கடம் புற்றமல் லாகத்துத்
தடைவி டாதனை யென்று பலாலிகண்
சார வந்தன ளோரிள வாலையே. (கக)

இக்கட்டளைக்கலிப்பாவும் இதன்பின்வரும் கட்டளைக்கலிப்பாவும் நாமாந்தரிதை என்னும் பிரகேளிகையமைத்துச் சுப்பிரமணியக் கடவுளையே பாட்டுடைத்தலைவராகக்கொண்டு பாடப்பட்டவை. இது முருகக்கடவுள் பவனிவருதலைக் கண்டு மயங்கிய மகளிர்செயல் கூறுவது.

இக்கட்டளைக்கலிப்பாவிலே கருதிய பொருளை மறைத்துக்கொண்டு வேறொன்றாகத் தோன்றிநின்ற பெயர்களாவன: சுன்னகம், தாவடி, கொக்குவில், கொடிகாமம், ஆனைக்கோட்டை, கட்டுடை, உடுவில், பன்னலை, மல்லாகம், பலாலி, இளவாலை என்பன. இவை யாழ்ப்பாணத்துள்ள பிரசித்திபெற்ற சில ஊர்களின்பேர்கள்.

இங்கே மறைத்து வைக்கப்பட்ட பொருளையும் கூறுதும். சுன்னகத்தான் : திருக்கைலாசமலைவாசராகிய சிவன், சுன் -வெள்ளி,

நாகம் - மலை. வழி - மகன். தாவடிக்கொக்கு - தாவுகின்ற அடியை யுடைய குதிரை. பெண்கொடி - பெண்ணாகிய கொடிபோல்பவள். காமத்தாள் - காமவிச்சையுடையவள். ஆனைக்கோட்டை வெளி கட்டு உடை விட்டாள் - யானைக்கொம்புபோன்ற ஸ்தனத்தையும் மருங்குற் பிரதேசத்தையும் மறைத்துக்கட்டுகின்ற வஸ்திரக்கச்சினை நெகிழ்ந்து வழுவவிட்டாள். உடுவிலான் - நக்ஷத்திரத்தினை மனைவி யாகவுடைய சந்திரன். உடு - நக்ஷத்திரம். இல் - மனைவி. பன்னாலையான் - சொல்லப்படுகின்ற கருப்புவில்லினையுடைய மன்மதன். ஆலை - கரும்பு. மல்லாகம் - வலியமார்பு. பலாலி - பலவாகிய துளி, இளவாலை - பெரிதும் இளம்பருவமுடைய பெண்.

பன்னி ரண்டு கரகந் தனையெட்டுப்
பானை யைத்துண் டதரக் குயவனை
முன்னி ரண்டு குடங்கையி லேந்தியை
முட்டி முட்டிமல் லாய்மாவைச் சாடியைப்
பொன்னி ரண்டு பெறும்பெருஞ் செட்டியைப்
போற்று வீர்புல வீர்சக ரந்தனை
முன்னர் வைத்த கலசம்பத் தும்பெறீஇ
முதன்மை சால்பெரு வாழ்வுறன் மெய்ம்மையே. ( )

இக்கட்டளைக்கலிப்பாவிலே வெளிப்படையில் வேறு பெயர்களாய் நின்று கருதிய பொருளை மறைத்து நிற்கும் சொற்களாவன: பன்னிரண்டுகரகம், எட்டுப்பானை, இரண்டுகுடம், முட்டி, சாடி, கலசம் பத்து, சால் என்பன. செட்டி என்பதும் சார்புநோக்கிச் சட்டி என்று கொள்ளும்படியும் நிற்கின்றது. பாத்திரப்பெயர்களாகிய இவற்றுடன் பாத்திர கருத்தாவாகிய குயவன் பெயருந் தொனிக்கின்றது,

இங்கே மறைந்து நின்ற பொருளையும் கூறுதும். பன்னிரண்டு சர கந்தனை - பன்னிரு திருக்கரங்களையுடைய கந்தசுவாமியை. எள் துப்பு ஆனை ஐ துண்ட அதரம் குயம் அனை - எட்பூவினையும் பவளத்தினையும் யானையையும் முறையே நிகர்த்த அழகிய மூக்கினையும் அதரத்தினையும் ஸ்தனத்தினையுமுடைய உலகமாதாவாகிய உமாதேவியார். முன் இரண்டு குடங்கையில் ஏந்தியை - முன்னரே இரண்டு உள்ளங்கையினாலும் ஏந்தி வளர்க்கப்பட்டவரை. முட்டிமுட்டி - எதிர்த்தெதிர்த்து. மா- சூரனாகிய மாமரம். சாடி - கொன்றவர். பொன் இரண்டு பெறும் - இலக்குமிபோன்ற பெண்களிருவரை மனைவியராகப் பெற்றுக்கொண்ட. சகரந் தனை முன்னர் வைத்த கலசம் பத்தும் - சகலசம்பத்தும். சால் - நிறைந்த. மற்றைய வெளி. கலசம் பத்து என்பதன் முன் சகரம் என்னும் எழுத்தினை வைக்குங்கால் அது சகலசம்பத்து என நிற்கும்.

## கட்டளைக்கலித்துறை.

மங்கள நல்லை வடிவேலர் வீதிவந் தார்மடவார்
பங்கயங் காந்தள் குவளைவெண் முல்லை பரப்பிமறு
கெங்கு நிறைகுடம் வைத்துமெய்த் தொண்டுசெய் தாரிதற்கோ
அங்க முழுதும் புளிதமி ளூர்க்கென் றறைந்ததுவே. (௧௩)

இக்கட்டளைக்கலித்துறையும் இதன்பின்வரும் இரட்டையாசிரிய விருத்தமும் நல்லைச் சுப்பிரமணியக்கடவுளைப் பாட்டுடைத் தலைவராக வுடையன.

## இரட்டையாசிரியவிருத்தம்.

ஆரா தனைக்காந் திருநல்லூர்
ஆறு முகத்தார் மனைவியரோ
டடுப்பி லடுத்த நெருப்பிலன்பர்
அகத்தை யுருக்குஞ் சாறுவைத்தார்

வாரா மறுகி னேராய்மென்
மடவா ரெடுத்தார் காற்பலச்சொன்
மரத்தைக் கோளி யாரெடுத்தார்
மருங்கின் மயலாய் நின்றேனே
ஊரா ருரையும் வம்பலரே
உற்ரு ரினுங்கோ வம்பலரே
உலவை யீரும் வைவாளே
உறுக்கி யணையும் வைவாளே
வேரா வுடம்பில் வரும்பீரே
விரும்பி யென்பாற் றிரும்பீரே
விளைவின் மதனுக் கத்தானே
விரும்புமென் ஞகத் தானே. (கச)

இது நல்லூர்க் கந்தசுவாமி கோவிற் கார்த்திகைத்திருவிழா ஒன்றிற் சென்று நின்றபோது கடவுண்மாட்டு மானுடமகளிர் நயந்தபக்கமாகக் கூறிய விருத்தம்.

அடுப்பிலடுத்த நெருப்பில் அன்பரகத்தையுருக்கும் சாறுவைத்தார் என்பது அடுக்களையிற் செய்யப்படும் பாகவிடயமாகப் பிரயோகிக்கும் ஒரு சொற்றொடர். இதனுள்ளே மறைந்து நின்ற பொருள்: பரணிக்கு அடுத்துநின்ற கார்த்திகைநக்ஷத்திரத்திலே திருவிழா வைத்தார் என்பது. அடுப்பு - பரணி. நெருப்பு - கார்த்திகை. சாறு — திருவிழா. இது வஞ்சிதை என்னும் பிரகேளிகை. வஞ்சிதையாவது பிறரறியாது பொருளை மறைத்துநிற்பது.

காற்பலச்சொன்மரம் என்பது ஆராய்தற்பாலது. கோளியார் — ஆலத்தி. இதுவும் நாமாந்தரிதை. கோளி — ஆலமரம். ஆர் — ஆத்திமரம். பின்னிரண்டடியும் இறுதியோடிடைமடக்கு. வம்பு அலர்-வம்பாகிய பழிமொழி. கோவம்பலர் — கோவமுடையார் பலர்.

உலவை ஈரும் வை வாள் — தென்றற்காற்ருனது அரிகின்ற கூரிய வாட்படைபோன்றுளது. வைவாள் — இகழ்ந்துரைப்பாள். வரும் பீரே — பசலே வரும். மற்றைய வெளி.

## கட்டளைக்கலித்துறை.

ஏற்பகத் தேயெழ வற்பக லோய்வுற லின்றிவைகும்
பொற்பகத் திற்குப் பொருடேடி யேயுழல் புந்தியுள்ளீர்
வெற்பகத் தேவயி லோன்முன் வருஞ்சுன்னே வேழமுகக்
கற்பகத் துக்கன்பா வீர்தருங் கற்ப கவளமுமே. (கரு)

## இரட்டையாசிரியவிருத்தம்.

கோலநீ லக்கரிய தூலகூ லப்பகடு
கூட்டியேர்ப் பூட்டியுழுநர்
கோனீட்டி யளவான சால்காட்டி யுழவிடறு
குடவளை முழங்கவிந்த்ர
சாலமா மெனவாளை மேலெழா விண்ணேங்கு
தாழையின் பாளையிடறுந்
தண்பணைச் சுன்ருக நண்பனே கலைஞான
தற்பரா பாதநமவே
சீலமா ரன்பரநு கூலகீ லாலமதி
சேகரா வேகஞான
சீதமா ருதம்வீசு காலமே லானபர
சீவவா தாரமுதல்வா
காலமே லானபர மூலகா ரணமான
கணபதீகரு ணநிதீ
கம்பனுக் கருளுமோர் கொம்பநம் பர்க்கினிய
கம்பகும் பத்தும்பியே. (கசு)

இவையிரண்டும் சுன்னாகத்துக் கோயில் கொண்டு வீற்றிருக்கும் சந்திரசேகரவிநாயகமூர்த்திமீது தோத்திரரூபமாக இயற்றிய செய்யுள்கள்.

## கட்டளைக்கலித்துறை.

மருக்கட்டு மாலை முடிமன்னர் கட்டளை வந்தபடி
தெருக்கட்டட் டாங்கன் மலைப்பாரை யொப்பனை செய்தடித்து
நருக்கட்டு மாமறுத் தாற்குற்ற மாக்கினை நம்பிக்கையென்
றிருக்கட்டு மாமிதற் கென்செய்கு வேன்சுன்னை யேரம்பனே.

இது யாழ்ப்பாணநகரியிலிருந்து காங்கேயன்றுறைக்குச் செல்லும் நெடுந்தெருவின் பக்கத்திலே காணிவைத்திருப்பவர் யாவரும் தத்தம் நிலங்களைச் சேர்ந்த தெருப்பாகங்களைக் கற்களிட்டுச் செப்பமுறக் கட்டிவிடல் வேண்டும் என்று அப்பொழுதையரசினர் கட்டளையிட்டபோது மனம் நொந்து சுன்னாகத்துச் சந்திரசேகரவிநாயகமூர்த்திமீது முறையீடுசெய்த கட்டளைக்கலித்துறை.

## இரட்டையாசிரியவிருத்தம்.

ஓங்குகரு ணையினுருவ மாங்குயிலை நிகருமொழி
யுமையம்மை பங்கனும்
உத்தமனு நத்தமர வத்தமிசை வைத்தவனு
மொண்சால மரநீழலில்
தாங்களிரு வருமாண்பெ ணுங்கொலென மருவியே
சரமசர முய்யமகவாய்த்
தந்திடச் சுன்னைநகர் வந்திரட் சிக்குமா
சாத்தவருண் மூர்த்திமீது
தேங்குமது ரத்தமிழி னுசிரிய மோதவென்
சித்தத்து ணித்தமுறையும்

திகழுமரு மறைமுதற் பிரணவத் துருவான
சிற்பர ஞன்கினுடனே
தாங்குமொரு கையன்முரு கையனுய் யக்குறத்
தையன்மை யற்குதவினேன்
சந்திரசே கரானந்த சிந்துரா னனஞான
தற்பரன் பொற்பாதமே. (கஅ)

இது சுன்னுகத்து மாசாத்தமூர்த்திமீது ஆசிரியவிருத்தம் பாடுதற்குச் சந்திரசேகரவிநாயகமூர்த்தியைத் துதிசெய்த மங்கலவாழ்த்து.

சந்திரசேகரவிநாயகருடைய பொற்பாதம் என் சித்தத்துள்ளே நித்தமும் உறையும் என முடிவு செய்க. நத்து அமர அத்தமிசை வைத்தவன் – விட்டுணு. சிவபிரான் மோகினிவடிவங்கொண்டு நின்ற விட்டுணுவை மராமரநீழலிலே கூடிப்பெற்ற பிள்ளையே மாசாத்தமூர்த்தி எனப்படும் ஐயனுர். இக்காரணத்தினுல் ஐயனுருக்கு அரிகரபுத்திரர் என்றும் பெயர். அரிகரபுத்திரர் – அரிக்கும் அரனுக்கும் புத்திரர். இவ்வரலாறு இங்கே முன்னிரண்டடியிலும் அமைக்கப்பட்டிருக்கின்றது.

பள்ளக் கடற்குமிழி கொள்ளக் கடைந்தமுது
பண்ணவர்க் கருளுமுந்திப்
பதுமத்த னும்புதிய மதுமத்த னுந்தரும்
பாலகா ஞாலமுதல்வா
கள்ளக் கொடுந்தொழிலி னுள்ளத்தி ஞேடுசெசி
கைப்பற்று மசமுகிதனைச்
கண்டங் கறுத்தவள்கை துண்டப் படுத்தமா
காளனை விடுத்தபரனே
அள்ளற் குரம்பினிடை வெள்ளத் தொதுங்கிவந்
தவிர்முத்து மதியென்னவே

ஆம்பற்கள் விள்ளமரை கூம்பச் சுரும்பிசை
யளித்திட நெளித்துவாளை
துள்ளப் பழங்களுதிர் பள்ளக்கு வளைவயற்
சுன்னையம் பதிவாசனே
சுத்ததத் துவமெத்து பத்தருத் தமசித்த
துத்யநித் தியவையனே. (கக)

உந்திப்பதுமத்தன் — விட்டுணு. மதுமத்தன் — சிவன். சசி — இந்திராணி. அசமுகி — சூரனுடையதங்கை. அசமுகிதனைக் கண்டங் கறுத்தவள்கை துண்டப்படுத்த என்பதனை அசமுகிதனைக் கண்டு அங்கு அவள் கை அறுத்துத் துண்டப்படுத்த எனப் பிரித்துக் கூட்டிப் பொருள்கொள்க.

இது வியுற்கிராந்தை என்னும் பிரகேளிகை. வியுற்கிராந்தையாவது அந்துவயத்தாற் பொருள்கொள்ளும்படி மறைத்துவைப்பது. மாகாளன் — ஐயனருடைய படைத்தலைவராகிய வீரமாகாளர். துத்யன் — துதிக்கப்படுவோன்.

மாதண்டம் வளைநேமி கோதண்டம் வாள்கொண்டு
வளரண்ட பகிரண்டமும்
மலருந்தி மிசைதந்த நரசிங்க வவதார
மதுசூ தனப்பெருமனும்
வேதண்ட முறுகாள கண்டனும் பண்டுதரும்
விமலமெய்ஞ் ஞானரூபா
விழியா யிரத்தரச ரயிரா பதத்தர்தமை
மிசைவாழ்வு வைத்தபரனே
தாதுண்டு வரிவண்டு மிகமண்டி யிசைகொண்டு
தடமண்ட வெடிவராஅல்
தங்குதெங் கின்பரும் பைங்குரும் பைக்குலை
தகர்த்திடத்தண் டலைதொறும்

சூதுண்டு வளர்முலைமி ஞர்வண்ட லயர்வயற்
சுன்னையம் பதிவாசனே
சுத்ததத் துவமெத்து பத்தருத் தமசித்த
துத்யநித் தியவையனே. (உ0)

இவை மூன்றும் சுன்னுகத்திலே கோவில்கொண்டு வீற்றிருக்கும் மாசாத்தமூர்த்திமீது தோத்திரரூபமாக இயற்றிய ஆசிரியவிருத்தங்கள்.

## கட்டளைக்கலித்துறை.

அம்பூர் விழிக்கடை மங்கையர் நாற்றிடு மார்வத்தஞ்சிக்
கம்பூர் வளவயற் சுன்னுகத் தையன் கனகிரிமேல்
வம்பூர் மனப்புல்லர்க் கன்பாக நாள்விட்டு வாழ்வதுதான்
செம்பூ ரணியை நரிகாத் திருந்த செயலொக்குமே. (உக)

இது மாசாத்த மூர்த்தியைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு ஒரு விவாகவிஷயத்திற் பாடிய கட்டளைக்கலித்துறை.

## கட்டளைக்கலித்துறை.

கல்லாத புல்லர் மனையணு காமற் கவியவர்மேற்
சொல்லாம னல்குர வில்லாம னித்தந் துயர்க்கடலுட்
செல்லாம னல்ல வரந்தரு வாய்செந் திருமருவு
நல்லாய் மயிலணி வாசா விசய நரசிங்கமே. (உஉ)

## இரட்டையாசிரியவிருத்தம்.

வித்துவான் வருகிறுர் மத்தியா னம்பொழுது
வெய்யிலுங் கடிதுகையில்
வேறென்ன வுதவுவது சோறென் னினுமுதவ
வேண்டுமென் றன்பர்கூறப்

புத்திதா ஞரரிசி குத்தியாக் கினதிங்கே
புலவனூர் வருவரென்றே
போங்காணு மெனமனைவி யாங்கார வசனங்கள்
புகலவவ ரிகலாகியே
கத்தியொரு வர்க்கொருவர் மெத்துகன பூசலாக்
கைகலந் தாடுமூடக்
கயவரைப் பாடாம லுனதுபொற் பாதமே
கவிமாலை சூடவருள்வாய்
சித்திசே ரடியர்க்கு முத்திதா னருளுநர
சிங்கமே மயிலணியில்வாழ்
தேமலர்க் கையனே காமனுக் கையனே
திருமங்கை மணவாளனே. (உரு)

இவையிரண்டும் சுன்னாகத்து மயிலணியிலே கோயில்கொண்டு வீற்றிருக்கும் நரசிங்கமூர்த்தி எனப்படும் விட்டுணுமூர்த்திமீது பாடப்பட்டவை.

நல்லவழி காட்டுவோ முடுபுடைவை சம்பளம்
நாளுநா ளுந்தருகுவோம்
நாஞ்சொல் வதைக்கேளு மெனமருட் டிச்சேர்த்து
நானமுஞ் செய்துவிட்டார்
மெல்லமெல் லப்பின்னை வேலையிங் கில்லைநீர்
வீட்டினிடை போமென்கிறார்
வேண்டியொரு கன்னியைக் கைக்கொண்டு கருவாக்கி
விட்டபின் கணவன்வேலை
இல்லைநீ போவென்று தள்ளுவது போலுமே
இனியெம்மை யெம்முறவினோர்
எட்டியும் பாரார்கள் கிட்டவும் வாரார்கள்
ஏர்ப்பூட்டி யுழவுமறியோம்

அல்லலா மிம்மைக்கு மறுமைக்கு நரகினுக்
காளாகி மிகவழிந்தோம்
ஆபரா பரனே கிறிஸ்தவர்க ளெங்களை
அடுத்துக் கெடுத்தார்களே. (உச)

வண்டியேன் மஞ்சமேன் கதிரையேன் குதிரையேன்
வாங்குமெத்தைகள் சிவிகையேன்
வட்டித்த கவிகையேன் மல்லிகைச் செடிகளேன்
வாழைகமுகுயர் தோட்டமேன்
பெண்டிரேன் பிள்ளையேன் திரவியத் தேட்டமேன்
பேணிவரு காணியினமேன்
பேரின்ப ஞானவழி யிதுகொலோ யேசுவும்
பின்பற்று சீடருங்கைக்
கொண்டதோ விவையெலா மவர்நின்ற ஞானவழி
கூறிநற் புத்திசொல்லிக்
குணமாக்க வல்லவிவர் பணமாக்க வந்தது
குறிப்பறிந் தும்வறுமையால்
அண்டினே முண்ணவு முடுக்கவும் வாழவு
மதற்குமங் கிடமில்லையே
ஆபரா பரனே கிறிஸ்தவர்க ளெங்களை
அடுத்துக் கெடுத்தார்களே. (உரு)

இவை யிரண்டும் கிறிஸ்துமதத்திலே வேதனநிமித்தம் பிரவேசித்த சிலரை உடுவிலில் இருந்த பாதிரியார் ஒருவர் விலக்கியபோது விலக்கப்பட்டார் கூற்றாகக் கூறிய ஆசிரியவிருத்தங்கள்.

முத்தகபஞ்சவிஞ்சதி முற்றிற்று.

---

# விலைப்புத்தகவிஞ்ஞாபனம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| தண்டியலங்காரப்புத்துரை. (சித்திரகவிப்படங்களுடன்) | க | ௦ |
| யாப்பருங்கலக்காரிகைப்புத்துரை. (அச்சில்.) | ௦ | ௦ |
| திருவாதவூரர்புராணவுரை. | ௦ | கஉ |
| சூடாமணிநிகண்டு கஉ தொகுதியும், (க-வதும், உ-வதும் சொற்பொருளுடன்.) | க | ௦ |
| சூடாமணி நிகண்டு க-வது சொற்பொருளுடன். | ௦ | ச |
| மேற்படி உ-வது சொற்பொருளுடன். | ௦ | ச |
| இதோபதேசம். (நீதிவாக்கியமுங்கதையும்.) | ௦ | அ |
| நீதிநெறிவிளக்கப்புத்துரை. | ௦ | கூ |
| திருவாதவூரர்புராணமூலம். | ௦ | ச |
| உரிச்சொனிகண்டு. | ௦ | கூ |
| யாப்பருங்கலப்பொழிப்புரையும் வெண்பாப்பாட்டியலும். | ௦ | கூ |
| இலக்கணசந்திரிகை. (அரியவிதிகளுடையது.) | ௦ | ச |
| இரகுவமிசக்கருப்பொருள். | ௦ | ச |
| மேகதூதக்காரிகை. | ௦ | ச |
| ஆத்திசூடிவெண்பா. (கதைகளுடன்.) | ௦ | ச |
| நகுலமலைக்குறவஞ்சிநாடகம். | ௦ | ரு |
| கலைசைச்சிலேடைவெண்பா அரும்பதவுரை. | ௦ | உ |
| மறைசையந்தாதி அரும்பதவுரை. | ௦ | உ |
| பழமொழிவிளக்கம். | ௦ | உ |
| சதாசாரக்கவித்திரட்டு. | ௦ | உ |
| ஆசாரக்கோவை. | ௦ | உ |
| சூடாமணிநிகண்டு ரு-வது வரைக்கும். | ௦ | அ |
| ஏகவிருத்தபாரதாதி. | ௦ | உ |
| முத்துக்குமாரகவிராசர் முத்தகபஞ்சவிஞ்சதி. | ௦ | உ |
| சிவஞானபோதமாபாடியமும் சிற்றுரையும். | உ | ௦ |